Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 2



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | சார்வரி மாசி **1961** பிப்ரவரி | இதழ் 2

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணு 4

குருபாதம்

# கயிலை மகா சந்நிதானத்திற்குக் கனகாபிஷேக விழா

தமிழ் நாட்டில் உள்ள தருமபுர ஆதீனத்தின் பெருமையை இன்று வடநாட்டினரும், அயல் நாட்டினரும் அறிந்துள்ளனர். ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளால் நானூறு ஆண்டுகட்கு முன் தோற்றுவிக்கப் பெற்ற இவ்வாதீனம் அன்று முதல் இன்று வரை சைவ நெறி வளர்ச்சிக்கும், தமிழ்மொழி வளர்ச்சிக்கும் செய்து வரும் தொண்டுகள் பலவாகும். இவ்வாதீன ஆட்சியில் 27 திருக்கோயில்கள் திருத்தமான முறையில் பரிபாலிக்கப் பட்டு வருகின்றன. தரிசனம் செய்வோரின் உள்ளம் புனிதம் அடையுமாறு இத்திருக்கோயில்கள் தூய்மையாகப் பாதுகாக்கப்படுகின்றன. சமய சம்பந்தமான சிறு வெளியீடுகள், இலக்கிய நூல்கள், யாத்திரை நூல்கள் முதலியவற்றை ஆதீனம் அவ்வப்போதும் வெளியிட்டு வருகின்றது. திருக்குறள் உரைவளம், குறிப்புரை, வரலாற்றாராய்ச்சி முதலியவற்றுடன் கூடிய திருமுறை அடக்கவிலைப் பதிப்பு, ஆங்கில மொழிபெயர்ப்புடன் கூடிய சித்தாந்த சாத்திரங்கள் முதலியவற்றை வெளியிட்டுச் சிறந்த பணியாற்றி வருகிறது. தமிழ்க்கல்லூரி, தேவாரப் பாடசாலை, வேதாகம பாடசாலை, ஆரம்பப்பள்ளி, உயர் நிலைப்பள்ளி, அநாதை இல்லம், சென்னையில் சமயப்பிரசார நிலையம் முதலியன அமைத்து மொழி, சமயம், சமூகம் ஆகியவற்றிற்குச் சிறந்த தொண்டாற்றி வருகிறது. கிராமங்களில் சமயப்பிரசாரம் செய்வதற்கென்றே மோட்டார் வாகனம் அமைத்து, தக்கவர்களைக்கொண்டு சிற்றூர்களி லெல்லாம் சமயப்பிரசாரம் செய்து வருகின்றது.

இப்பணிகளை யெல்லாம் இப்பொழுது மேன்மேலும் சிறப்பாக நடத்திவருபவர்கள் 25-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளாவார்கள். இவர்கள் ஒளி மிக்க திருமேனியும், ஊன் பொருளவாகச் செலச்சொல்லிப் பிறர்வாய் நுண்பொருள் காணும் திறமும், கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

| மலர் 34 | சார்வரி மாசி 1961 பிப்ரவரி | இதழ் 2 |
|---|---|---|

## சிவக்கவிமணி சிறந்தனர்

(நல். முருகேச முதலியார், பி.ஏ.)

" அன்னோனை இழந்தஇவ் வுலகம்
என்னு வதுகொல் அளியது தானே " —புறம்.

ஸ்ரீமத் சம்பந்தசரணாலயத் தம்பிரான் சுவாமிகள் (சிவக்கவிமணி திருமுறை ஞானபானு-சி. கே. சுப்பிரமணிய முதலியார்) கோவையில் 1961, ஜனவரி 24-ம் தேதி சிவனடி நீழல் எய்தினர் எனக் கேட்டுச் சைவ உலகம் வருந்துகிறது. குறிப்பாகச் சைவ சித்தாந்த மகா சமாஜம் அப் பெரியாரது மறைவைப் பெரும் நஷ்டமாகக் கருது கிறது. சுவாமிகள் திருத்தொண்டர் புராணத்திற்கு இயற் றிய ஆழ்ந்த சிறந்த உரை என்றென்றும் உலகில் நிலவும் என்பதில் ஐயமில்லை. தற்காலச் சைவ சித்தாந்திகளில் படிப்பிலும், உழைப்பிலும், ஒழுக்கத்திலும், அன்பிலும் இவர்கள் தலைசிறந்தவர் எனக் கூறுவது மிகையாகா.து. அவர்களது வாழ்க்கைக் குறிப்புக்களைத் திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள், " சிவக்கவிமணி வாழ்க்கைத் திறன் " என்ற தலைப்பில் ஒரு சிறு நூல் 1948-ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்கள். (சுவாமிகளும் தான் சில குறிப்புகளை எழுதி வைத்திருப்பதாகவும், அதை வெளி யிடத் தான் வழி தேடவில்லையென்றும் அடியேனிடம் சென்ற ஆண்டு கூறினார்கள்.) சுவாமிகளது மனை வாழ்க் கையின் தூய்மையையும், வழக்கறிஞர் தொழில் வாழ்க் கையின் நேர்மையையும், சமய வாழ்க்கையின் மாண்பை யும் பற்றி அறியாதார் இல்லை. சிறப்பாகக் குறிப்

பிடத்தக்க அவர்களது சிவபக்தியும், தம் ஆசிரியர் திரு. கயப்பாக்கம் - சதாசிவம் செட்டியார் அவர்கள் போன்ற சைவப் பெரியார்களிடத்தில் கொண்டிருந்த குருபக்தியும், எல்லோரிடமும் வைத்த அன்பும் பெரிதும் பாராட்டற் பாலனவாகும். அவர்களது வாழ்க்கை சைவர்கள் யாவர்க்கும் ஒரு சிறந்த வழிகாட்டியாக இருக்கிறது.

சுவாமிகள் பல நூல்கள் இயற்றியிருந்தாலும் பெரிய புராண உரையைப் போன்ற பெரிய ஒரு நூல் இதுவரை யாவராலும் செய்யப்படவில்லை. இந்த உரையை எழுத நேர்ந்த வரலாற்றை அவர்கள் 1937-ஆம் ஆண்டு வெளி வந்த உரை முதல் பகுதியில் முகவுரைக்கு முன்னுரை என்ற தலைப்பில் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:—"பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்திற்குக் குறிப் புக்களுடன் ஒரு பதிப்பு வெளியிடலாம் என்ற எண்ணம் மூன்று நான்கு ஆண்டுகளாக என்னுள் எழுந்து நின்றது. உரிய படங்களும், தேவாரக் குறிப்புகளும், பழைய ஏட்டுப் பிரதிகளிற் கண்ட பாடபேதங்களும் அதில் வெளிவர வேண்டுமென்றும் விரும்பினேன். ஆனல் இப்போது என் செயல் எனக்கே நகையினைத் தருகின்றது, பெரிய புராணத்தின் அளவு கடந்த பெருமைக்கும் எனது அளவு கடந்த சிறுமைக்கும் எத்தனை தூரம் என்று. ஆயினும் அந்த ஆசை என்னை விடவில்லை. ஆசை அச்சத்தை விழுங்கி மேலெழுந்தது." நடராஜப் பெருமான் துணை கொண்டே உரை எழுதியதாக அவர் கூறுவது வழக்கம். பல விடங்களில் பொருள் விளங்கவில்லை யென்றும், அப் போது தயிலும்போது, "பெருமானே! நீ பொருள் காட்ட யான் அறிய வேண்டுமென்று பிரார்த்திப்பதும், பின் சில தினங்களுக்குப் பிறகு பொருள் வெளிப்படுவதும் உண்டு என்று கூறியுள்ளார்கள். கடல்போல் விரிந்த அவரது உரை 1948-ஆம் ஆண்டுதான் முடிவடைந்தது. அச்சுப் பூர்த்தி 1954-ஆம் ஆண்டுதான் ஆயிற்று. இடையில் ஒரு சமயம் முதலியாரவர்களைத் திருவண்ணாமலையில் கார்த்திகை தீபதரிசனத்தின்போது உயர்திரு. புரிசை முதலியார் அவர்கள் இல்லத்தில் கண்டபோது, புரூப் திருத்திக்கொண் டிருந்தார்கள். உரை முடியும் வரை தாம் உயிரோடு இருப் போமோ, எழுதிய பின்னும் அச்சுப் பூர்த்தியைப் பார்ப்

போமோ எனச் சந்தேகித்தார். இறைவனருளாலும் (எம்போன்ற) அடியார்களின் பிரார்த்தனைகளாலும் புராண உரை இனிது முடிந்தது. பூர்த்தி விழாவும் வெகு சம்பிரமமாக 1954 மே மாதம் தில்லையில் நடந்தேறியது. விழாவுக்கு அடியேனைத் தலைமை தாங்கவேண்டுமென்று ஒரு நண்பரிடம் சொல்லியனுப்பினார்கள். ஒன்றுக்கும் பற்றாத அடியேனை இந்தப் பெரும்பணிக்கு அழைத்தது எனக்கு வியப்பையும் அச்சத்தையும் தந்தது. அன்பின் காரணமாகப் பணியை ஏற்றுக் கொள்ளலாமென எண்ணினேன். உத்தியோகத் தொல்லையினால் கூடாமற்போயிற்று. இந்தச் சம்பவம் முதலியாரவர்களது பெரும் குணத்தைக் காட்டியது. கோவைசெல்ல நேர்ந்தபோதெல்லாம் அடியேன் அவரைக்கண்டு தரிசிப்பது வழக்கம். அவர்கள் அனுபவம் சார்ந்த பொன்மொழிகள் இன்பத்தையே ஊட்டும். அவர்களும் சென்னைக்குவரும் நண்பர்களிடம் அடியேனது நலத்தைக் கேட்டுவரும்படி சொல்லிவிடுவது வழக்கம். அவர்களை என் உள்ளத்திலே குருத்தானத்திலே வைத்துப் போற்றுகின்றேன்.

மூன்றாண்டுகளுக்கு முன் பதினோராம் திருமுறையிலுள்ள மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலைக்கு அடியேன் எழுதிய ஒரு சிற்றுரையை அவர்கள் பார்வைக்கு அனுப்பினேன். அவர்கள் பதிலெழுதிய கடிதத்தில் தாம் பன்முறை அத் திருவிரட்டை மணி மாலையைப் படித்துள்ளதாகவும், அடியேன் உரையில் தமக்குத் தோன்றாத சில அரிய கருத்துக்களை அடியேன் எழுதியுள்ளதாகவும் தெரிவித்தார்கள். குறைகளைக் காணாது, குணத்தை மட்டும் பாராட்டியது அவர்களது பெருமையைக் காட்டியது.

சுவாமிகள் 1958-ம் ஆண்டு டிசம்பர் மாதம் மயிலத்தில் நடந்த சைவ சித்தாந்த மகா சமாஜ மாநாட்டுக்கு அடியேனுடைய விருப்பத்திற் கிணங்கி விஜயஞ்செய்து மூன்று நாட்களும் தங்கியிருந்தார்கள். மாநாட்டின் பின் அவர்களுடன் சேர்ந்து திருவதிகை, திருநாவலூர், திருத்துறையூர் முதலான சிவத்தலங்களைத் தரிசிக்கும் பெருத்த பாக்கியம் அடியேனுக்குக் கிட்டியது. அதை என்றும் மறவேன். தமக்கு அப்பர் வயது நடக்கிறது என்று அடிக்கடி சொல்லிக்கொண்டே உடல்வருத்தம் பாராது முறைப்படி

தரிசித்து மகிழ்ச்சியுற்றார்கள். சுவாமிகள் சமாஜ மாநாட்டில் ஒரு அரிய ஆசிமொழியும் கூறினார்கள். அவர்கள் முதிர்ந்த அறிவாலும் பக்தியாலும் பகர்ந்த மொழிகள் பொன்னேபோல் போற்றத் தக்கன. திருத்தொண்டர் புராணத்தில் கண்ட நாயன்மார்கள் வாழ்க்கை ஒவ்வொன்றிலும் நாம் காண்பது இறைவனிடம் வைத்த பத்தியும் அடிமையும், அடியார்களிடம் வைத்த அன்பும் என்று விளக்கினார்கள். சைவ சித்தாந்தம் ஒரு சாத்திரம்மட்டும் இல்லை; அது வாழ்க்கையே என்று சொன்னார்கள். அதற்கு எடுத்துக்காட்டாக ஒரு அரிய நிகழ்ச்சியையும் எடுத்துக் கூறினார்கள். உயர்திரு. கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் அவர்கள் கோவையில் வதிந்திருந்து பெரிய புராணம் பிரசங்கித்துவந்த காலத்தில் ஒருநாள் விடியற்காலை தானும் செட்டியாரும் வெளிப்புறம் போகச் சென்றார்கள். வழியிலே ஒரு சிறு நீரோடைப் பள்ளத்தைக் கடக்க நேர்ந்தது. செட்டியாரவர்கள் எப்போதும் கைத்தடி ஒன்றைப் பற்றிப்போவது வழக்கம். அவர்கள் தடியை ஊன்றித் தாண்டியும் சருக்கி விழுந்தார்கள். செட்டியாரவர்கள் 'சிவசிவ' என்று சொல்லிக்கொண்டு இறைவனே உன் திருநாமத்தைப் பற்றுகக் கொள்ளாது இத்தகைத் தடியை இதுகாறும் பற்றித் திரிந்தேன். என்ன பேதைமை? என்னகற்று என்? என்று வருந்திக் கைத்தடியை அக்கணமே வீசி எறிந்துவிட்டு, அது முதல் கைத்தடிபற்றுவதில்லை என்று உறுதி கொண்டதாகச் சொன்னார்கள். இது தான் சைவசித்தாந்தம். வாழ்க்கையில் இறைவனையே உறுதுணை என்று முடிந்த முடிவுக்கு வருவதே சைவசித்தாந்தம் என்று சுவாமிகள் வெகு நயத்துடன் விளக்கினார்கள்.

சுவாமிகளைக் கடைசி முறையாகக் கோவையில் அடியேன் கண்டபோது, ஏதாவது எழுதிக்கொண்டிருந்தால் உடல் நலம் சிறிது செம்மைப்படுகிறது. எனவே முன்னெழுதின சில குறிப்புகளைக்கொண்டு "வாகீசர் அல்லது மெய்யுணர்வு" என்ற ஒருவியாசத்தை மெள்ள எழுதவதாகத் தெரிவித்தார். அதைத் தவிர "சேக்கிழாரும் சேயிழையார்களும்" என்ற நூலும் கையேட்டுப் பிரதியில் இருப்பதாகத் தெரிவித்தார்கள். ஆனால் அவைகளை அச்சேற்றுவதற்கு ஒரு வழியுமில்லை என்று கூறினார்கள். வாகீசரைக்

குறித்த நூல் பூர்த்தியான உடன் கையெட்டுப் பிரதியை எனக்கு அனுப்பிவைத்தார்கள். அடியேனுடைய வேண்டு கோளுக்கிணங்கத் திரு. உத்தண்டராம பிள்ளை அவர்கள் அந்நூலை வெளியிடுவதற்குப் பெரிய உதவி செய்தார்கள். அதுபோலவே "சேக்கிழாரும் சேயிழையார்களும்" சென்ற ஆண்டு வெளிவந்தது.

சுவாமிகள் எழுதிய பெரிய புராண உரை அவர் புக ழுடம்பாக என்றும் நிலவும். அது சுவாமிகளின் முதிர்ந்த கல்வி கேள்வி அனுபவங்களின் பயனாக விளைந்த உரை. அதைச் "சித்தாந்த ஞானமிர்தம்" என்றே கூறலாம். அதைச் சைவர்கள் போற்றிப் பாராட்டிப் படித்துப் பய னடைவதே சுவாமிகளுக்குச் செய்யும் கைம்மாறாகும்!

---

# சைவர் மாநாட்டுத் தலைமையுரை

[சைவப்பெரியார்-திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ.,எல்.டி.]

(மலர் - 34; இதழ் - 1; 48-ம் பக்கத் தொடர்ச்சி)

இப்போது சமயப் பிணக்குகளிலும் மத மாற்றங்களி லும் பிற நாட்டு அறிஞர்கட்குள்ளும் வெறுப்பு வளர்ந்து வருகிறது. உலக அரசாங்கம் ஏற்படவேண்டும் என்று பலர் விரும்புவதுபோல், உலக சமயமும் ஒன்று தேவை என்று எண்ணத் தலைப்பட்டுள்ளனர். "Inter Religious League", "Union for the Study of Great Religions", "World Union" என்பன போன்ற சர்வ மத சங்கங்கள் ஏற்பட்டுள்ளன. நம் சைவமும் தன் தனிப் பண்புகளை இழக்காமலே பிற சமயங்களோடும் ஒத்துழைத்து, "உல கெலாம் ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட" மன்று ளாரை வேண்டுதல் வேண்டும். இக்கருத்து நமக்குப் புதிய தல்ல. பின்வரும் பிரமாண வாசகங்கள் இதற்குச் சான்று பகரும்.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
ஒன்றதே பேரூர் வழியாற தற்குள
நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழும் நாயை ஒத்தாரே. —திருமந்திரம்

" சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர் " —திருவாசகம்

" எதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி "
——சம்பந்தர் தேவாரம்

" விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்தே
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும் "

" .........ஆறு சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன; தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன இன்னம்பரான்றன் இணையடியே "
—திருநாவுக்கரசு தேவாரம்

" சுருதி வானவனும், திருநெடு மாலாம்;
சுந்தர விசும்பின் இந்திரனும்
பருதி வானவனும், படர்சடை முக்கட்
பகவனும், அகவுயிர்க் கமுதாம்
எருதவா கனனுமாம், எயில்கள் மூன்றெரித்த
ஏறுசே வகனுமாம் பின்னும்,
கருதவார் கருதும் உருவமாம், கங்கை
கொண்ட சோளேச்சரத் தானே "—கருவூர்த்தேவர்

" ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு " —பட்டினத்தார்

" வருணை நெறிசார் மதத்தம் மதமெய்ப்
பொருளுணர் வுடிறும் உந்திபற
பொன்றுத தோன்றேயோன் றுந்திபற.

தோல்வியும் வெற்றியும் கொள்மதங்கட் கெலாம்
காலவே தந்தி றுண்டு உந்திபற
கருத்தன் செயலதன் றுந்திபற.

வாதிகள் தங்களுக்கல்லால் மதங்களுக்கு
ஒதார் வலியின்மை உந்திபற
ஒதி உணர்ந்தோரென் றுந்திபற." —சாந்தலிங்கர்

" விண்ணவர் இந்திரன் முதலோர்...
செப்பரிய சமயநெறி...

இயல்பென்றும் திரியாமல்...
அந்தோ! ஈததி சயம்...
சன்மார்க்க ஞான மதின்பொருளும்..."

எனத் தொடங்கும் ஐந்து பாடல்களில் (ஆகார புவனம் - சிதம்பர ரகசியம் என்னும் பகுதியிலுள்ளவை) சைவ மாண்பை உள்ளவாறு உரைத்துப் பின், "இப்பரிபக்கம் சமயமுமாய் அல்லவாகி, யாதுசமயமும் வணங்கும் இயல்ப தாகி", "மௌனமோலி அயர்வாய்ச் சென்னியில் வைத்து ராஜாங்கத்தில் அமர்ந்தது வைதீக சைவம் அழகிதந்தோ!" என்று சமரச ஞானியாம் தாயுமானர் வியந்து பாடுவதன் பொருத்தம் போற்றத் தக்கதாம்.

மேற்குறித்த பெரும் பகுதியில் இறங்குமுன் எல்லாப் பெரு நலங்களையும் நோக்கங்களையும் தன்பால் முன்னமே கொண்டுள்ள நம் பண்டைச் சைவ சமயத்தின் தத்துவங் களையும் ஒழுகலாற்றையும் தெளிவாய் உணர்ந்துகொள்ளச் சைவர்களிற் கற்றோரனைவரும் முற்படவேண்டும். கல்வி வல்லார்களாயில்லாத நம் சைவ சகோதர சகோதரிகள் யாவரும் அவ்வாறுசெய்ய ஊக்கமளிக்க வேண்டும். உதவி புரியவேண்டும்.

இப்படி நம் சமுதாயமும் பிற சமுதாயங்களும் ஒழுக் கம், புத்தி, ஞானம், தியாகத்தொண்டு இவற்றில் முன னேற்றம் அடைவதற்கு எண்ணில பல தொண்டர்கள் தேவை. இத் தொண்டினை மேற்கொள்வோர்கட்கு வேண் டிய முக்கிய தகுதிகளுள் முதன்மையானது, இவர்களும் அந்நலங்களைக் குறிப்பிடத்தக்க அளவாவது பெற்றிருக்க வேண்டுவது. தம்மை ஆன்மீகத்துறையில் சிறப்புள்ளவர் களாக ஆக்கிக் கொள்வதோடு தம் குடும்பத்தாரையும் உற வினரையும் ஊராரையும் அந்நெறியில் விருப்பங் கொள்பவ ராக்கவும் விரும்பி இயன்ற அளவு தியாகத் தொண்டாற்ற வேண்டும். பின்பு இதே மனப்பான்மையும் விரிந்த நோக்க மும் உடைய பிற மதத் தொண்டரோடும் கலந்து பொது நலத் தொண்டு தெய்வ நம்பிக்கை உணர்வுடன் ஆற்ற வேண்டும். ஆலயங்களும், மடங்களும், நன்றாகப் பயிற்சி பெற்ற சமய போதகர்களைக் கொண்டு ஒழுங்கான முறை யில் சமயப் பிரசாரம் நாடெங்கும் செய்யவேண்டும்.

சைவர்கள் தம் தகுதிக்கேற்ற சிவ தீக்ஷையைத் தகுதி வாய்ந்த ஆசாரியர் மூலமாய்ப் பெற்றுக்கொண்டு அவர் உபதேசித்தபடி மனம் வாக்குக் காயங்களைச் சிவநெறியில் செலுத்தித் தூய்மை பெறவேண்டும். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் "தின நியமம்" என்னும் பழைய கட்டுரை ஒன்றைப் படித்தேன். அவர்களுடைய நியம முழுவதையும் பின்பற்றுதல் பெரும்பாலோர்க்கு இயலாது போகலாம். எனினும், அதை ஒரு குறிக்கோளாகக் கொண்டு இயன்ற அளவு அதனைப் பின்பற்றி, அதில் முன்னேற்றம் தரும்படி திருவருளை வேண்டி முயன்றுவருதல் கடன்.

ஆலய வழிபாட்டையும், செவ்விய முறையில் செய்து கொண்டு அடியார் கூட்டத்திற் கலந்துகொள்ளல், தல யாத்திரை செய்தல்போன்ற பதிபுண்ணியச் செயல்களை வளர்த்து வரவேண்டும்.

சிவபக்தி யிருக்குமிடத்துச் சீவ கருணையும் இருக்க வேண்டுமாதலால் இப்பசு புண்ணியச்செயலைத் தனித்தும் சங்கத்திற் சேர்ந்தும் செய்யத் திட்டங்கள் வகுத்துக் கொண்டு நம்மால் இயன்ற அறங்களை அன்புடனும் அடக்கத்துடனும் செய்துவருதல் அவசியம்.

வார வழிபாட்டுச் சங்கங்கள் எல்லா ஊர்களின் முக்கியப் பகுதிகளிலெல்லாம், ஆலயங்களிலோ சமய சபைகளிலோ முறை பிறழாது நிகழ்ந்துவருவதற்கு வேண்டிய உதவிகளெல்லாம் செய்துவருதல் பெரும் புண்ணியமாம். கூட்டுப் பிரார்த்தனையினல் பெரும் பயன் விளையும் என்பதைப் பல இடங்களிலும் உணர்த்திவருதல்வேண்டும். தமது வருவாயுள் ஒரு சிறு பகுதியைப் புண்ணிய காரியங்களுக்கென ஒதுக்கிவைத்து, நன் முறையில் அதனை அளித்துவர வேண்டும். இதனேடு நாள்தோறும் வீட்டில் உலையில் அரிசி போடுமுன் வீட்டரசியார் ஒருபிடி அரிசியை "இது அடியவர்க்கும் ஏழைகட்கும் உதவுவதாக" என்னும் ஓர் எண்ணத்துடன் ஒரு கலயத்தில் இட்டுவரவேண்டும். இதனேடு ஒவ்வொரு குடும்பத்திலும் வாரத்திற்கொருமுறை சமயக் காணிக்கையாகச் சிறு தொகையை அன்புடன் உண்டியில் இட்டுவரும் வ்ழக்கமும் ஏற்படவேண்டும். இப்படிச்சேரும் அரிசியையும் சமயக் காணிக்கையையும் சமய சங்கம் ஒன்றிடத்து ஒப்படைத்துச் சமய குரவர்,

திருநட்சத்திர நாட்கள், பிற நாயன்மார்கள் நாட்கள் போன்ற நல்ல நாட்களில் ஏழைகட்கும் அடியவர்கட்கும் நன்முறையில் பயன்படுத்த வழி செய்யவேண்டும். சிற்றூர்களில் சமயப் பிரசாரத்திற்கும் பயன்படுத்தலாம்.

சமய நூல்களை முறைப்படிப் பாடங்கேட்க வசதியுள்ளவர்கள் அங்ஙனம் செய்யவேண்டும். இவ் வகுப்புக்களை நடத்தவல்ல புலவர்களையும் தமிழ்வல்ல பிற புலவர்களையும் பலவகையிலும் ஆதரித்து வரவேண்டும்.

நமது தாய்மொழியிலுள்ள சிறந்த சமய நூல்களையும் இலக்கியங்களையும் பாரதநாட்டுப் பிறமொழிகளிலும் அடுத்துள்ள நாட்டு மொழிகளிலும், உலக மொழியாம் ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து நூல் வடிவிலும் பத்திரிகைகளில் வரும் கட்டுரை வடிவிலும் அடிக்கடி வெளியிட்டு வரச் சமய சங்கங்கள் முற்படவேண்டும். சைவ சமய சங்கங்கள் ஒவ்வொரு ஊரிலும் இருத்தல் விரும்பத்தக்கதே. இவைகள் தலைமைச் சபை ஒன்றோடு இணைந்து நின்று அதற்கும் ஆக்கம் அளித்தல் அவசியம். ஜனநாயக ஆட்சி நடக்கும் நாடுகளில் பலர் ஒன்றுகூடி ஆராய்ந்து ஏற்றமுறையில் அறிவிக்கும் கருத்துக்குத்தான் அரசாங்கம் அதிக மதிப்பளிக்கும் என்பது தேற்றம். இம் முறையில் சைவ சித்தாந்த மகா சமாஜம் போதிய வலிவு பெறுதிருப்பது வருந்தத் தக்கதே. பெருந் தொண்டுகள் பல புரிந்துள்ளதும், தமிழ் நாட்டின் தலைமைச் சைவ சபையாயிருப்பதுமாகிய இச் சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்கு ஆயிரம் பேர்தானும் அங்கத்தினர்களாகச் சேரவில்லையே என்று எண்ணும்போது நெஞ்சம் புண்ணுகின்றது. இந்தக் குறையை இறைவன் எப்போது நீக்குவானோ அறியேன்!

சைவ சமயப் பிரசாரத்தைப் பல அடுக்குகளிலும் செய்தல் அவசியம். சிறப்பு வகையில் ஏழைமக்களின் நலங் கருதி நாமே வலியச் சென்று அவர்கட்கு விளங்கும் வகையில் அவர்களும் நன்னெறி மேற்கொள்ள அவாக்கொள்ளச்செய்யும் முறையில் இசைத்தட்டு முதலிய அவசியமான உதவிகளைக்கொண்டு சென்று பிரசாரம் செய்யவேண்டும். எல்லோரும் சேர்ந்து பாடிய பின்பு அவர்கட்குப் பிரசாத விநியோகம்செய்வதும் நல்லது. துண்டுப் பிரசுரங்களை இலவசமாக அளிப்பதும் அடக்கவிலைச் சிறு

நூல்களை வெளியிடுவதும் இன்னோன்ன நற்றொண்டுகளைப் பெரிய அளவில் புரிவதும் நம் சைவ சபைகளின் கடமையாகும். சமயப் பாதுகாப்புக்கும் வளர்ச்சிக்குமாக உங்கள் நாட்டில் கையாளப்பெறும் நன் முறைகளை இந்தியாவிலிருந்து வந்திருக்கும் அன்பர்கள் தெரிந்துகொண்டு அவைகளைத் தங்களூர்களில் கையாளவும் எண்ணலாம்.

இன்னோன்ன பிற பல தொண்டுகளையும் சைவ நன் மக்கள் மேன்மேல் வளர்த்துவந்து, மேல்நிலை அடைய அம்மையப்பர் அருள் புரிவாராக! இமயத்துச்சியில் தியான கோபுரத்தில் அனைத்துயிர்க்கும் அப்பராகிய தக்ஷிணாமூர்த்தி எழுந்தருளியுள்ளார். குமரி முனையில் நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று நம்மன்னை தவக்கோலத்தில் காட்சியளிக்கின்றாள். இவர்கள் குழந்தைகளாகிய நம் எல்லோருக்கும் தவமும் தியானமும் நம் வாழ்க்கையைப் புனிதப்படுத்தும் குறிக்கோள்களாய் மன்னுவனவாக! இந்த அருந்தவ நாயகியே காஞ்சி அறம்வளர் செல்வியுமாக எழுந்தருளி யிருப்பதை நம் பெண்ணினம் சிறப்புவகையில் "அண்ணவர் தமை அர்ச்சனைபுரிய ஆதரித்தாள், பெண்ணில் நல்லவளாயின பெருந்தவக் கொழுந்து" என்ற உண்மையைத் தன் உள்ளத்திற் பதித்துப் பெரியோர் மதிப்பிற்குரிய புனித வாழ்க்கையை நடத்தி உயர்வதாக.

"போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றி மால்நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்ய ஆட்கொண் டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்!"

"வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்!!

திருச்சிற்றம்பலம்

---

# சைவ மங்கையர் மாநாட்டு வரவேற்புரை*

(திருமதி மகேஸ்வரி ஸ்ரீகாந்தா)

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலக மெல்லாம்.

அறிவும் ஆற்றலும் மிக்க தலைவியவர்களே, அறிவிற் சிறந்த பெருமக்களே, சகோதர சகோதரிகளே, உங்களனைவருக்கும் எனது அன்புகனிந்த வணக்கம்.

ஈழத்திலே பாடல்பெற்ற தலமாகிய திருக்கேதீச்சரத்தில் நடக்கும் இச்சிறந்த விழாவிற்குச் சமுகமளித்திருக்கும் அனைவரையும் வரவேற்கும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்திருப்பதுபற்றி மிகுந்த மகிழ்ச்சி யடைகிறேன். இச் சந்தர்ப்பத்தை எனக்களித்த வரவேற்புச் சபைக் குழுவினருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்விழாவை இம்முறை ஈழத்திற் பாடல்பெற்ற ஸ்தலமாகிய திருக்கேதீச்சரத்தில் நடத்துவதற்குச் சம்மதமளித்த சைவ சித்தாந்த மகா சமாஜத்தாருக்கு நாம் என்றும் கடமைப்பாடுடையோம். திருக்கேதீச்சரத் திருப்பணி வேலைகள் நடந்துகொண்டிருக்கும் இவ் வேளையில் பாரத நாட்டு அறிஞர்கள் விரிவுரைகள் நிகழ்த்தவும் தலைமைதாங்கிப் பேருரைகள் ஆற்றவும் சமுகமளித்திருக்கிறார்கள். இவர்களின் உரைகள் யாவும் சைவ சமயத்தின் சிறப்புப் பற்றியே யாதலால் இவ்விழா இந்த ஸ்தலத்தில் நடப்பது மிகவும் பொருத்தமாகும்.

இச்சிறந்த வைபவம் இவ்விடத்தில் நடப்பதற்குக் காரண கர்த்தாவாக விருக்கும் முன்னாள் அமைச்சரும், சிவில் சேர்விஸ் சேவையில் உயர்ந்த பதவிகளை வகித்தவருமாகிய சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள், சமயப் பணியிலீடுபட்டு ஆற்றுந் தொண்டு போற்றத்தக்கது.

---

* திருக்கேதீச்சரத்தில் (31-12-1960) நடைபெற்ற சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜ 55-ஆம் ஆண்டுவிழா, சைவ மங்கையர் மாநாட்டில் திருமதி மகேஸ்வரி ஸ்ரீ காந்தா அவர்கள் நிகழ்த்தியது.

திருக்கேதீச்சர ஆலயத் திருப்பணிச் சபைக்குத் தலைவராய் விளங்குமிவர் இவ்விழா இவ்விடத்தில் நடப்பதற்கு வேண்டிய ஒழுங்குகளையும் வசதிகளையும் எமக்களித்திருக்கிறார்.

இந்த நேரத்தில் சைவத்துக்கும், தமிழுக்கும் அளப்பரிய சேவைசெய்த இரு பெரியார்களைப்பற்றி நினைவு கூராமலிருக்க முடியாது. அவர்கள் செந்தமிழ்ச் செல்வராகிய ஆறுமுக நாவலரும், சிறந்த அரசியல் ஞானியும் வள்ளலுமாகிய சேர் பொன்னம்பலம் இராமநாதனுமாவர். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரின் புகழ் ஈழத்தில் மட்டுமன்றி இந்தியாவிலும் பரவியிருப்பது யாவருமறிந்ததே. வள்ளலென யாவராலும் போற்றப்படும் சேர் பொன். இராமநாதன், சைவப் பெண்பிள்ளைகள் சைவச் சூழ்நிலையிற் கல்வி பயிலவேண்டுமென்பதை உணர்ந்து பெண்களுக்கெனச் சைவக் கல்லூரி ஒன்றைத் தமது சொந்தப் பணத்தைக்கொண்டு நிறுவியிருக்கிறார்கள். ஈழத்தில் பெண் பிள்ளைகளுக்கென நிறுவப்பட்ட முதற் சைவக் கல்லூரி இராமநாதன் கல்லூரியே. சமயத்தையும் மொழியையும் பேணி வளர்க்கும் பொறுப்புப் பெண்களுடையதாகும். குழந்தைகளை வளர்க்கும் பொறுப்புத் தாய்மார்களுக்கே. தாய்மார்களிடம் சமயப்பற்றும் மொழிப்பற்றும் இல்லாவிட்டாற் பிள்ளைகளிடம் அப்பற்றைக் காண்பதரிது. "இளமையிற் கல்" என்ற ஆன்றோர் வாக்கியத்தைக் கடைப்பிடித்துப் பிள்ளைகளைக் குழந்தைப் பிராயத்திலேயே சன்மார்க்க வழியில் நடக்கப் பழக்கல்வேண்டும். சைவப் பெண்கள் இதை உணர்ந்து தங்கள் கடமையிற் றவறாது பணியாற்றல் வேண்டும். முற்காலத்திற் சைவ நெறியினின்று வழுவாது சமயத்தைப் பேணி வளர்த்த பெருமையையுடைய மங்கையர்க்கரசியார், திலகவதியார் போன்றவர்களின் வாழ்க்கை எமக்கோர் எடுத்துக் காட்டாகும். இக்காலத்திலும் யாழ்ப்பாணத்தில், சுன்னாகம் செல்லாச்சியம்மையார், நல்லூரைச் சேர்ந்த சடையம்மையார் ஆகியவர்கள் சிறந்த ஆத்ம ஞானிகளாக விளங்கியிருக்கிறார்கள். ஆழ்ந்த தெய்வ பக்தியுடைய செல்லாச்சியம்மையாரைத் தரிசிப்பதற்குப் பலர் செல்வது வழக்கம். 'சுன்னாகத்தம்மா' என்றால் செல்லாச்சி யம்மையாரையே

குறிக்கும். சடையம்மையாரவர்கள், சிவனடியார்களாகிய யாத்திரீகர்களின் வசதிக்காகக் கதிர்காம க்ஷேத்திரத்திலும், திருச்செந்தூரிலும், நல்லூரிலும், கீரிமலையிலும் மடங்கள் ஸ்தாபித்திருக்கிறார்.

இவ்விழாவிற் சமுகமளித்திருக்கும் எல்லோரையும் வரவேற்புச் சபையினர் சார்பில் அகமகிழ்ந்து நல்வரவுகூறி வரவேற்கின்றேன். குறிப்பாகப் பாரதநாட்டிலிருந்து வந்த பெரியார்கள், சகோதர சகோதரிகளனைவருக்கும், இன்றைய மாநாட்டிற்குத் தலைமை தாங்கிச் சிறப்பிக்கும் அன்பும் அறிவும் மிக்க திருமதி ஆதிலக்ஷ்மி அம்மையாருக்கும், பேச்சாளர்களாக வந்திருக்கும் சகோதரிகளுக்கும் 'அன்போடு வருக, வருக! தங்கள் வரவு நல்வரவாகுக' என்று கூறி வரவேற்கின்றேன்.

உங்களனைவரையும் சந்திக்கும் பேற்றைப் பெற்றமைக்கு மகிழ்ச்சி யடைகிறேன். எல்லாம்வல்ல இறைவன் சைவமும், தமிழும் தழைத்தோங்கத் தொண்டுசெய்யு மனைவருக்கும் அருள் புரிவாராக. வணக்கம்.

---

# சைவ மங்கையர் மாநாட்டுத் திறப்புரை*

(பண்டித பாலாம்பிகை தனபாலசிங்கம்)

அவைத் தலைவரவர்களுக்கும் இங்குக் கூடியிருக்கும் பெரியோர்களுக்கும் எனதன்பார்ந்த வணக்கம்.

"அறையு மாடரங் கும்ஆடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சரும் காய்வரோ
இறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ."

அறியாத சிறுகுழந்தைகள் நிலத்திலே சிறுவீடுகளையும் நடனசாலைகளையும் கட்டி விளையாடினால், அதைப்பார்த்துச் சிற்ப நூல்களை நன்குணர்ந்த ஆசாரிமார்கள் கோபிப்பார்

---

*திருக்கேதீச்சரத்தில் (31-12-60) நடைபெற்ற சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜ 55-ம் ஆண்டு விழா, சைவ மங்கையர் மாநாட்டில் பண்டிதை பாலாம்பிகை தனபாலசிங்கம் அவர்கள் நிகழ்த்தியது.

களோ? கோபிக்கமாட்டார்கள். அதுபோலவே சிறிதுமறி வில்லாத எம்மாலியற்றப்பட்ட கவிகளில் குறையிருந்தா லும் அறிவிற் சிறந்த பெரியோர்கள் கோபம்கொள்ள மாட்டார்கள் என்பது கம்பர் வாக்கு. முற்றுமுணர்ந்த முதுக்குறைவாளர் பலர் குழுமியிருக்கும் இப் பேரவைக் கண் எம்மனோர் சிலவுரைகள் கூறப்புகுவது மிகையா மெனினும், தம் பெருந்தன்மையால் எம்மை மன்னித்து விடுவார்களென நம்புகிறேன். பசுபதியாகிய இறைவன் உயிர்கள்மாட்டுக் கொண்ட பெருங்கருணைப் பிரவாகத் தினல் அவைகள் உண்மைப் பொருளை அறிந்துய்யும் பொருட்டுப் பல உபகரணங்களை உவந்தளித்திருக்கிருர். ஆறறிவுடைய மானிடப்பிறவியு மதனுளொன்ருகும். இது நன்மையையுந் தீமையையும் பகுத்துணரவல்லது. இப் பிறவியினுற்ருன் நாம் அடையக்கூடிய பெரும்பேற்றை யடையவேண்டும். எவ்வாறடைவது, 'வல்லான் வகுத் ததே வாய்க்கால்'. எல்லாம் வல்ல முழுமுதலிறைவனுல் வகுக்கப்பட்ட வேதாகமங்களைக் கற்று அதன் வழி யொழுகல் வேண்டும். இவ்வாறு கற்க இயலாதவர்கள் அவைகளின் வழிநூல்களையாவது கற்றறிதல் வேண்டும். தமிழராய்ப் பிறந்து அதிலும் சைவ சமயத்தைத் தழுவி நிற்பவர்களோவ்வொருவரும் சித்தாந்த நூல்களைக் கற்க வேண்டும். வேதாகமங்களை இறைவன் திருவாய்மலர்ந் ததுமன்றி, காலத்திற்குக் காலம் அவதார புருஷர்களைத் தோற்றுவித்து, அவர்கள் வாயிலாகப் பல சித்தாந்த நூல்களையும் எமக்கருளியுள்ளார்.

இச் சைவ சித்தாந்தமானது எல்லாச் சமயப் பொருள் களையும் தன்னகத்தே யடக்கி ஒருவிதமான பிணக்குமின்றி உண்மைப் பொருளைக் கூறிநிற்பது.

" ஓதுசம யங்கள்பொரு ளுணருநூல்கள்
ஒன்றேடொன் ருெவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
லிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காண
நிற்பதுயா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினு லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்."

சமயங்களும், அந்தச் சமய சாஸ்திரங்களும், அந்தச் சாஸ்திரங்களிலே சொல்லப்படும் பொருளும் ஒன்றோடொன்று ஒற்றுமையின்றிப் பலதிறத்தனவாக விருக்கும். இவைகளுள் மேலான சமயம் யாது, சாத்திரம் யாது என்று ஆராயுமிடத்து, இது நல்லது, அது தீயது என்கின்ற பிணக்கு ஒன்றும் இல்லாமல், நீதி முறையினால் எல்லாப் பொருள்களையும் தன்னகத்தேயடக்கி நிற்கும் சமயம் சைவசித்தாந்தமே யாகும்.

இது பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளின் இலக்கணங்களைக் கூறுவது. பதி - முதல்வன்; சிவபெருமான். அவருடைய இலக்கணங்களை எடுத்துக் கூறுதல் மிகையாகும். பசு - ஆன்மா. இது அநாதியாகவே மல சம்பந்தமுடையது. பாசம் - மலம். இது ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும். ஆன்மாக்கள் ஆணவ மலத்தினாற் கட்டுண்டு தம்வயமிழந்து அகங்காரம், பொறாமை முதலிய துர்க்குணங்களுக்கு அடிமைப்பட்டுப் பல இழி தொழிலைச் செய்யும்.

இத் தீயகுணங்களும், செயல்களும் பாமரரிடையேயன்றிப் பல பெரியோர்களிடத்தும் காணப்பட்டது; காணப்படுகின்றது. முன்பு சகலாகம பண்டிதரென்னும் பேராசிரியர் ஒருவர் இருந்தார். அவர் வேதசிவாகமங்களைக் கற்றுணர்ந்த மேதாவி. இவரிடம் கல்விபயிலும் மாணவரோ அநேகர். இவ்வாறு இவர் சற்குரு நிலையையடைந்து பெருமையோடு வாழுங்கால், சைவ சித்தாந்த வாரிதியாகிய மெய்கண்ட தேவரின் புகழ் இவருடைய செவிக்கெட்டியது. இவருடைய மாணாக்கரு மிதை யறிந்தனர். அவர்களுக்குத் தேவரைக் காணவேண்டுமென்ற அவா உண்டாயிற்று. தமதாசிரியரிடம் விடைபெற்றுக் கொண்டு திருவெண்ணெய் நல்லூரை யடைந்தார்கள். ஆசிரியர் சிறிது காலம் பார்த்தார். மாணாக்கர் திரும்பிவந்தபாடில்லை. அவருக்குக் கோபம் மேலிட்டது. எவ்வாறாயினும் நான் அங்குச்சென்று அவரை அடக்குதல் வேண்டும் என்று சென்றார். அங்குக் கண்ட காட்சி கண்கொள்ளாததாக விருந்தது.

தேவர், தாய் தந்தையர் நெடுங்காலந் தவமிருந்து அரிதிற் பெற்ற தவப்புதல்வர், சிவஞானச் செல்வரென்

பதையும், ஐந்தாவது வயதிலே பேரறிவு முற்றப்பெற்றவ ரென்பதையும், பரஞ்சோதிமாமுனிவரிடம் சிவதீக்கை பெற்றவரென்பதையும பண்டிதர் அறிந்தாரில்லை. அவர் இப்போது கண்டது யாதெனில், தாரகை நடுவண் தண்மதி போல ஆயிரக்கணக்கான சிடர்கள் மத்தியில் பதி பசு பாச விலக்கணங்களை விளக்கிக் காட்டிக்கொண்டிருத்தலையே. அதனாலே பண்டிதர்க்குப் பொருமை பிடர்பிடித்துந்தியது. அகங்காரம் வாளாவிருக்க விடவில்லை. யானோ பிராம ணன். இவரோ வேளாளன். என்னிலும் பார்க்க இவர் வருணத்திலும், வயதிலும் குறைந்தவர். எவ்வாற்ருனும் இவரை அவமானப்படுத்துதல் வேண்டுமென்று நினைந்து மதிப்பில்லாமல் அவர் முன்னிலையிற் சென்று தேவரை நோக்கி, ஆணவமல சொரூபத்தைத் தரிசித்தல் எப்படி என்று வினவினர். பிள்ளையாருக்கு விஷயம் விளங்கி விட்டது. தனி இரக்கம்கொண்டார். "இறைவனே! எவ் வளவோ நூல்களைக் கற்று அதிதீவிர பக்குவத்தை யடைந்த இப் பெரியாரிடத்தும் ஆணவமல சேட்டை சிறிதிருக் கின்றதே" என நினைந்து, பண்டிதரை முடிமுதலடிவரை நோக்கினர். அவருக்கு நயன திட்சை ஆகிவிட்டது. மெய்ஞ் ஞானம் உண்டாகியது. தான் தேவரை, ஆணவமலசொரூ பத்தைக் காண்பது எப்படி என்ற கேள்வியே ஆணவ முனைப்பினல் எழுந்ததென்பதை நன்கறிந்தார். செய்த தவற்றை யுணர்ந்து மிகவும் வருந்தினர். தேவர் முன்னிலை யில் மரம்போல விழுந்து, "என்னை வாழ்விக்க வந்த குருவே, நான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண் டும்" என இரந்தார். தேவர் அவர்மே லிரக்கமுற்று அவரைத் தம்முடைய சிடருக எற்று மெய்ப்பொருளை உப தேசித்துச் சிவஞான சித்தியாரென்னும் அரிய நூலை இயற்றி உலகிற் கீயவேண்டுமென்று கட்டளையிட்டார்.

பேரறிவு கைவரப்பெற்ற பண்டிதரையே ஆணவம் எவ்வாறு ஆட்டிவைத்தது என்பதை அறியுங்கள். இத் தகைய வலிமைபொருந்திய மலம் எங்களைச் சும்மாவிடப் போவதில்லை. ஆதலால் எம்முடைய நிலைக்கேற்றவாறு நல்வினையைச் செய்து அம் மலபந்தத்தினின்றும் விடுதலை யடைய முயற்சி செய்தல்வேண்டும்.

இல்லறம் மேற்கொள்பவனுக்கு நல்லொழுக்கமும், நற்சிந்தனையும், நல்ல சூழ்நிலையும் அத்தியாவசியம்.

"ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்"

என்றார் திருவள்ளுவர்.

ஒழுக்கத்தை உயிருக்குச் சமமாகப் பாவிக்கின்றார் வள்ளுவர். எவ்வகை யுயர்ந்த பதவியி லிருந்தாலும், எத்துணைப் பெருஞ்செல்வனாயிருந்தாலும் அவன் ஒழுக்கந் தவறியவனாயின் அவன் கீழாக மதிக்கப்படுவான். அவனுடைய செல்வாக்கும் செல்வமும் பிழையான வழியில் உபயோகிக்கப்படும். அதனால் உலகிற்குக் கேடேயன்றி நன்மை கிடையாது. பஞ்சமாபாதகங்களை விலக்கல்வேண்டும். நீதிநூல்களிற் கூறப்படும் முறைகளை யநுசரித்தல் வேண்டும். தநுகரண புவன போகங்களை எமக்களித்த இறைவனை வாயார வாழ்த்தல்வேண்டும்.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்றும்
ஆரூரா என்றென்றே யலறா நில்லே"

என்றார் அப்பர்சுவாமிகள்.

இதுவே நாங்கள் கடைப்பிடிக்கவேண்டிய நான்கு பாதங்களின் முதற்படி. இதனையே சரியாமார்க்கம் என்று சொல்லுவார்கள். இயன்றவரையில் நாம் ஆலயங்களுக்குச் செல்லவேண்டும். அவைகளைக் கூட்டுதல், மெழுகுதல் ஆகிய சிவத்தொண்டுகளைச் செய்தல்வேண்டும். பூமாலைகள் கட்டிக் கொடுத்தல் வேண்டும். சிவபெருமானுடைய புகழைப் பாடவேண்டும்.

இச் சிவபுண்ணியங்களினாலேயே எம்மைத் தூய்மைப் படுத்திக்கொள்ளவேண்டும். பெரும்பாலும் சைவ சமயக்

கிரியைகள் வீண்பொழுது போக்காவண்ணம் அமைந்து கிடக்கின்றன. காலையில் காலைக்கடன், மாலையில் மாலைக் கடன்; இவைகள் செய்யநேர்ந்தால், எஞ்சிய இடைவேளை தொழில் பார்ப்பதற்குச் சரியாக அமைகின்றது. வீண் வார்த்தைகள் பேசவோ அவசியமில்லாத கருமங்களி லீடு படவோ நேரமிருக்காது. வாழ்க்கை ஒழுங்கானமுறையிற் சென்றுகொண்டிருக்கும். ஆன்மசுத்தியுண்டாகும். நிற்க.

நாங்கள் செய்யும் நல்வினை தீவினையின் பயனாகவே எங்களுடைய ஆகாமியம், பிராரப்தம், சஞ்சிதம் என்னும் மூவகைக் கன்மங்கள் ஏற்படுகின்றன. சைவ சித்தாந்தம் கண்ட உண்மைகளில் இதுவுமொன்றாகும். எம்மைப் பற்றித் தொடர்வன புண்ணியம், பாவம் என்னும் இரண்டுமேயாம். "பற்றித் தொடரு மிருவினை புண்ணிய பாவமுமே" என்றார் பட்டினத்தடிகளும். இந்த வினையின் பயனையே நாமனுபவித்துக்கொண்டிருக்கிறோம். "பேறிழ வின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னு மாறுமுன் கருவிப்பட்டது" என்றார் மேலோர். இவ்வடிக ளெங்களுக்கு எவ்வளவு ஆறுதலைத் தருகின்றது என்பதை ஆராய்ந்து பார்ப்பவர்க்கே விளங்கும். எமக்கு ஒரு தீங்கு சேர்ந்தவிடத்து அதற்கு ஏதுவாயிருந்தவரையே வைகிறோம். உணர்ச்சிப்பெருக்கினால் அவர்களுக்குப் பல தீங்குகளைச் செய்யவேண்டுமென்கிறோம். ஆனால், இப்பாட்டு நினைவிற்கு வந்தால் மனத்திற்கு அமைதி ஏற்படுகின்றது. முன்னாளிலே நாம் ஏதோ பாவஞ்செய்துவிட்டோம். அதனாலேயே எமக்கு இப்படி வந்துவிட்டது என நம்மை நாமே நொந்துகொள்ளும் நிலை வந்துவிடுகிறது.

சைவ சித்தாந்தம் பிராரப்தத்தைப்பற்றி உணர்த்திராவிட்டால் மனிதன் அமைதியுடன் வாழவியலாது. மனம்போன போக்கிற்கெல்லாம் தீவினைபுரிந்து கன்மங்களைப் பெருக்கி அல்லல்பட்டுழலவேண்டிவரும்.

நாமும் பெண்களென்றமுறையில் ஒளவைப்பிராட்டியாரைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூறுமலிருக்க முடியவில்லை. அம்மையார் ஐந்து வயதுச் சிறுவர்களை இலேசிற் கற்றுத் தெளியும்வண்ணம் வாழ்க்கைமுறையை வகுத்துவிட்டார். பன்னிரண்டு உயிர் எழுத்துக்களை

முதலாகக்கொண்ட மூதுரைகளை நோக்குவோம். எடுத்த வுடனேயே 'அறம் செய விரும்பு' என்கிறார். முதன்முத லாகக் குழந்தைக்கு அதன் பிஞ்சு உள்ளத்திற் பதியும்படி தருமத்தைத்தான் உபதேசிக்கின்றார். அதனால் அதர்மம், அநியாயம் செய்யலாகாது என்பதனை வலியுறுத்தித் தரு மம் தலைகாக்கும் என்பதை உணர்த்துகிறார். பின் 'ஆறுவது சினம்' என்கிறார். சினமே சகல நன்மைகளை யும் கெடுப்பது; பழி பாவங்களை உண்டாக்குவது. 'சின மென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்றார் திருவள்ளு வரும். இது எத்தனையோ தவங்களையும், நாடு நகரங் களையும், பெண்டிர் பிள்ளைகளையும் சில நிமிட நேரங்களில் அழிக்க வல்லது. இதன் கொடுமையையறிந்து சினம் ஆற வேண்டும் என்றார். 'இயல்வது கரவேல்'—உங்களால் இயன்ற உதவியை மற்றவர்களுக்குச் செய்யுங்கள். மறைக்க வேண்டாம் என்றும், 'ஈவது விலக்கேல்'—ஒருவர் கொடுப்பதை நீவிர் தடுக்கக்கூடாது, கொடுப்பாரை அரு கிருந்து தடுத்தல் நரகத்திற்குப் போவதற் கேதுவாய பெரும்பாவமாதலின் அதையும் விலக்கவேண்டும். 'உடை யது விளம்பேல்'—மனிதன் சுயமரியாதையோடு வாழ வேண்டுமென்றும், அவசியமின்றித் தன்னுடைய பெல வீனங்களைக் கூறுதல் முறையல்லவென்றும், 'ஊக்கமது கைவிடேல்'—சோம்பலுள்ளவிடத்து லட்சுமி வாசஞ் செய்யாளென்றும் ஊக்கமின்றி எவ்வகைக் கருமமும் ஈடேறாது என்று முணர்த்தினர். 'எண் எழுத் திகழேல்'— கணிதம் தர்க்கம் என்னும் இரண்டினையும் இலக்கிய சாஸ் திரத்தையும் அவமதிக்காதே, நன்றாகப் படி என்கின்றார். இம்மைக்கும் மறுமைக்கும் பயன்தரவல்ல கல்வியறிவு எப்பொழுதும் வேண்டும் என்றார். 'ஏற்பது இகழ்ச்சி'— ஒருவனிடத்துக் கை தாழ்த்தி வாங்குதல் எப்படியாயினும் இழிந்தசெயலாகும். 'நல்லாறெனினும் கொளல்தீது மேலு லகம், இல்லெனினும் ஈதலே நன்று' என்றார் வள்ளுவரும். நன்மை உண்டாகுவதாயிருந்தபோதிலும், ஒருவரிடத்து ஒன்றைப் பெற்றுக்கொள்ளுதல் கூடாதாம். சுவர்க்க லோகந்தான் கிட்டாவிட்டாலும் ஒருவனுக்கு ஒன்றைக் கொடுத்தல் சாலச்சிறந்ததேயாகும். 'ஐயமிட்டுண்'—இரப் பவர்களுக்குப் பிச்சை கொடுத்துச் சாப்பிடுவதை அருண

கிரிநாதரும் 'நோய்பிற் பிளவளவேனும் பகிர்மின்கள்' என்ருர். 'ஒப்புரவொழுகு'—நடக்கும் முறையை நன்ருக உணர்ந்து அதன்படி நட. 'ஓதுவதொழியேல்'—எந்தக் காலத்திலும் படிப்பதைக் கைவிட்டுவிடாதே. "கல்வி தொட்டாற் ருேழுன் விட்டால் மாற்ருன்" என்பாராகலின் சொற்ப நேரமாவது ஒவ்வொரு நாளும் கற்க வேண்டுமென்கின்ருர். ஓதுதல், தேவார பாராயணம் முதலியவற்றையுமிங்குக் குறிப்பிட்டார். 'ஔவியம் பேசேல்'—பொருமை காரணமாக எழும் வீண் பேச்சுக்களைப் பேசாதே என்று முடிக்கிருர். அறவுரைகளோ, புத்திமதிகளோ, கடமைகளோ எல்லாம் அடங்கிக் கிடக்கின்றன. இதனுல் தமிழருக்கிருந்த போதனைசக்தியின் திறமை இனிது விளங்குகின்றது.

பெரியோர்களே! அநேக பல பெரியார்கள் சொன்மாரி பொழியக் காத்துக்கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய பொழுதை வீணுகக் கழிக்க நான் விரும்பவில்லை. ஆதலால் எனது சிற்றுரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன். சைவமங்கையர் மாநாட்டைத் தொடங்கி வைக்கிறேன். வாழ்க சைவ சித்தாந்தம்.

---

# சைவ மங்கையர் மாநாட்டுத் தலைமையுரை*

[திருமதி க. ர. ஆதிலட்சுமி அம்மையார்]

"அங்கத்துறு நோய்களடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே."

சிவநேயச் செல்வர்களே, செல்வியர்களே! உங்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கம்.

ஈழமும் தேவாரமும்: பூழியர்கோன் வெப்பொழித்த காழிவேந்தர் திருஞான சம்பந்தராலும், தேசமுய்யத் திருத்

---

*திருக்கேதீச்சரத்தில் (31-12-60) நடைபெற்ற சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜ 55ஆம் ஆண்டு விழா, சைவ மங்கையர் மாநாட்டில் திருமதி க. ர. ஆதிலட்சுமி அம்மையார் அவர்கள் நிகழ்த்தியது.

தொண்டத்தொகையருளிய சுந்தரமூர்த்தி நாயனாராலும் பாடப்பெற்ற சிறப்புடைய இத் திருக்கேதீச்சரம் ஈழத்தைத் தமிழ்நாட்டுடன் இணைத்துப் பிணைத்துவிட்டது. இத் தலத்தில் நடைபெறும் கும்பாபிஷேக நிகழ்ச்சியுடன் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தை இங்கழைத்து அதன் 55ஆம் ஆண்டு நிறைவு விழாவினையும் நடைபெறச் செய்தது மிகவும் பொருத்தமானதே.

ஈழமும் சமாஜமும் : ஈழநாட்டிற்கும் சமாஜத்திற்கும் வெகுகாலமாக நெருங்கிய தொடர்புண்டு. சமாஜத்தில் முதலாவது ஆண்டுவிழாத் தலைவர் ஈழநாட்டுத் தவத் தோன்றலாகிய சேர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்கள். பின்னிட்டுச் சில ஆண்டுகள் சுவாமி விபுலானந்தர் முதலான ஈழத்துப் பெரியார்கள் தலைமையில் நடைபெற்றுள்ளன. பொன்விழா, பெரியார் திரு. சு. நடேச பிள்ளையவர்கள் தலைமையிலே 1955ஆம் ஆண்டு தில்லையில் நடைபெற்றது. ஆண்டுதோறும் கூடும் சைவசித்தாந்த மாநாடுகளில், ஈழத்துப் பெருமக்கள் பலரும் சிலருமாகத் தவறுமல் வந்து கலந்துகொள்வதோடு, ஆயுள் அங்கத்தினராகப் பலரும், ஆண்டுச் சந்தாதாரராகப் பலருமாக, சமாஜ வெளியீடுகளை, ஆயிரக்கணக்கில் வாங்கி ஆதரவளித்து வருவது, சமாஜத் தொடர்பை நன்கு விளக்குகின்றது.

சமாஜமும் குடும்பத் தொடர்பும் : சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் தொடர்பு எங்கள் குடும்பத்திற்குச் சுமார் 20 ஆண்டுகளாக வாய்த்துள்ளது. எனது கணவனார் சில ஆண்டுகள் செயலாளராகப் பணிபுரிந்துள்ளார். எனது மூத்த மகள் காமாட்சி, மாதர் கூட்டத்தில் இருமுறை தலைமை வகித்தும் பலமுறை சைவர் மாநாட்டில் பேசியும் உள்ளார். இளைய மகள் டாக்டர் சேதுவும் சீர்காழி மாநாட்டு மாதர் கூட்டத்திற் பேசியுள்ளார். ஆண்டுக் கூட்டம் நடைபெறும் இடங்கள்தோறும் குடும்பத்துடன் சென்று கலந்துகொள்வதும் உண்டு. இவைகளுக்கெல்லாம் காரணம் சமாஜத்தார் தொடர்ந்து காட்டிவரும் அன்புதான். முன்பு ஒருமுறை மாதர் மாநாட்டுத் தலைமைப் பொறுப்பை எனக்களித்த சமாஜத்தார் இவ்வாண்டும் அவ்வாய்ப்பைத் தந்திருப்பது இறைவன் திருவருளும் சமா

ஐத்தாரின் அன்புமேயாகும். சமாஜத்து அன்பர்களுக்கும், வரவேற்புக் கழகத்தார்க்கும் எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சமாஜ வளர்ச்சி: சமாஜம் முதலிற் பல ஆண்டுகள் ஆடவர், பெண்டிர் இருபாலார்க்கும் பொதுவாக ஆண்டு விழாக்களை நடத்தி வந்தது. பின்னிட்டு மங்கையர்க்கென்றே தனி மாநாடு ஒன்றையும், அதன் பின்னர் இளைஞர் மாநாடு ஒன்றையும் இணைத்து மூன்று பிரிவுகளாக நடத்திவருகின்றது. சைவர் மாநாட்டிற் பொதுவாகச் சைவ சமயத்தின் தொன்மை, பெருமை, முப்பொருளுண்மை முதலியவற்றில் நன்கு பயின்று முதிர்ச்சியுற்ற பெரியார்கள், அவற்றையெல்லாம் எடுத்து விரிவாகவும் சிறப்பாகவும் பேசிவருகின்றனர். எனவே, மாதர் மாநாட்டில் மாதர்தம் வாழ்க்கையின் சமயத்துறையிற் செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றி மட்டும் யானறிந்தமட்டிற் சிலவற்றைக் கூற விரும்புகிறேன்.

தங்கருமம்: உலகில் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும், தத்தம் நிலைக்கேற்ற கடமைகள் உண்டு. ஒரு குடும்பத்திலேயே, தந்தைக்குரிய கடமை, தாய்க்குரிய கடமை, அவர்தம் மக்கட்குரிய கடமை என்று அவரவர்க்குரிய வெவ்வேறு திறப்பட்ட கடமைகளுண்டு. இக்கடமையை வடமொழியில் சுதர்மம் என்று கூறுவர். திருக்குறள் ஆசிரியர் "தங்கருமம்" என்கிறார். "தங்கருமம் செய்வார் தவம் செய்பவர்" என்பது அவர்தம் பொன்மொழி.

தாயின் கடமை: குடும்பத்தில் தந்தையை விடத் தாய்க்குத்தான் கடமைகள் அதிகம். அக் கடமைகளைச் சரிவர ஒழுங்காகச் செய்வதே அவருக்குத் தவமாகிறது. திருவள்ளுவர் வகுத்த வாழ்க்கை நூலாகிய திருக்குறளில் இல்லற இயலானது, இல் வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு என்ற அதிகாரங்களுடன் தொடங்குகின்றது. அவற்றுள் பெண்களுக்கு இன்றியமையாப் பண்புகளான கற்பு, கொண்டான் வருவாய்க்கேற்பச் சிக்கனமாய் வாழ்க்கை நடத்துதல், பிறந்த, புகுந்த குடும்பங்களின் புகழ் காத்தல் ஆகியவற்றைப் பின்வருங் குறட்பாக்களால் வள்ளுவர் விளக்குகிறார்.

(1) "மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

(2) "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

மக்களைப்பெற்று அவர்களைப் பண்புநலஞ் சான்றவர்களாகச் செய்வது தாயின் முதற் கடமையாகும். தத்தம் பொருட்செல்வங்களாகிய மக்களை எல்லாப் பண்புகளும் நிறையவனுக்கிக் கண்டு மகிழ்தல் தாய்க்கு இயல்பாயினும், அவனைச் சான்றோன் எனத் தக்கார் சொல்லக்கேட்டு உவத்தலே சாலச் சிறந்ததாகும். இதனை வள்ளுவனார்,

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"

என்ற குறள் மூலம் எடுத்துக் காட்டுகின்றார்.

சங்ககாலத் தாய்: சங்கநூலாகிய புறநானூற்றில் தமிழ்த் தாயொருத்தி "ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே" என்றாள். புறந்தருதல் - காப்பாற்றுதல். உடலை வளர்த்துக் காப்பாற்றுவதோடு மட்டும் நின்றுவிடாமல், ஒழுக்கத்தையும் உடன் வளர்த்துக் காப்பதே சாலச் சிறந்ததாகும்.

வாழ்விற் சமயம்: நம் நாட்டிற் சமயம் ஒழுக்கத்தினின்றும் இணைபிரியாத தொடர்புடையது. வாழ்க்கையே சமயம்—சமயமே வாழ்க்கை. அன்றாட வாழ்க்கையிலும், வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும், மணிக்கோவையின் ஊடே செல்லும் நூலைப்போல உயிர் நாடியாக விளங்குவதும் இச் சமய உணர்ச்சியே யாகும். இத்தகைய சமயத்தோடு ஒன்றிய வாழ்க்கையிற் பெண்களுக்கும் பெரும்பங்குண்டு. சிவனடியார்களின் வரலாறான திருத்தொண்டர் புராணத்துள் 63 நாயன்மார்களின் சிறப்புக்களும் கூறப்பெற்றதென்றால், அவர்தம் உயரிய வாழ்க்கைக் குறிக்கோள்களையெல்லாம் வெற்றியுற நிறைவேற்றப் பெருந்துணையாய் நின்ற மகளிரை நாம் மறத்தல்முடியாது. இதைச் சேக்கிழாரும் குறிக்க மறக்கவில்லை. இல்லாள் என்ற பெயருக்கேற்பவே எண்ணிறந்த பெரும்பாலான மகளிர், வெளி

வாழ்க்கையில் இடம்பெறுது வீட்டில் இருந்தவண்ணமே, அமைதியான முறையில் தொண்டாற்றுவதே இயல்பு. சைவ மகளிருள்ளும் இங்கொரு காரைக்காலம்மையார் அங்கொரு மங்கையர்க்கரசியார் தவிர ஏனைய மகளிரெல்லாம் தத்தம் கணவன்மாருக்குப் பின்னணியிலிருந்தவாறே சமயத்தைப் பேணியது போற்றற்குரியது. இந் நிலையினைச் சேக்கிழார் சிறுத்தொண்டநாயனரது மனைவியின் பெருமையைக் குறிக்கவந்தவிடத்து "இல்லறத்தின் வேரனையார்" எனக் கூறும் உவமை உன்னி உன்னித் தெளியற்பாலது. பரந்த மரந்தான் கட்புலனுக்குத் தோன்றுமேயன்றி, அதனைத் தாங்கும் அதே அளவினதாய வேர் மண்ணில் மறைந்துகிடக்கின்றது. அத்தகையோரிற் சிலரைக் காண்போம்.

கணவன் மனைவியர்க்குள்ளே மிகுந்த கருத்து வேறுபாடு இருந்தும் அது அண்டை அயலாருக்குத் தெரியாவண்ணம் திருநீலகண்டர் மனைவியார் வாழ்க்கை நடத்தினர் என்பதைச் சேக்கிழார் திருநீலகண்டர் புராணத்துள் "அயலறியாமை வாழ்ந்தார்" என்று குறிப்பிடுகின்றார். விருந்தோம்பலுக்கு இலக்காய் நின்ற இளையான் குடிமாறனர் மனைவியார் வறுமையின் உச்ச நிலையிலும் கொண்டவற்றைக் கொண்டு "கைம்மை வினையினல் வேறு வேறு கறியமுதாக்கி" நள்ளிருளில் வந்த விருந்தை ஓம்பியவர் என்று அம்மையாரது விருந்தோம்பலைப் பாராட்டுகின்றார். முதற்குலமாகிய அந்தணர் குலத்திற் பிறந்தும் கடைக்குலத்துதித்த வேளாளராம் அப்பர் பெருமானைத் தெய்வமென்றே கொண்டொழுகிய அப்பூதியடிகளின் மனைவியாரது விருந்தோம்பலைச் சேக்கிழார் கூறும் இலைபோட்டுப் பரிமாறும் விதத்தைக் கூட "ஈர்வாய் வலம் வைத்து" என்ற சொற்றொடர், மகளிர் சேக்கிழாரிடங் கற்றறியக்கூடிய அளவில் அமைந்துள்ளது.

இவ்வாறுகப் பின்னணியிலிருந்தே தொண்டாற்றும் பெண்கள் சிற்சில சமயங்களிற் சூழ்நிலை காரணமாக முன்னணிக்கு வரவேண்டிய அவசியமும் ஏற்படுகின்றது. அத்தகையோருள் இருவர் காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார் ஆவர். இவ்விருவருள்ளும், காரைக்காலம்மையாரை விருந்தோம்பலின்கண் சேக்கிழார் அறிமுகப்படுத்து

கின்ற இடம் சமையலறையேயாகும். "கறியமுதங்குத வாதே திருவமுது கைகூட" என்ற அடியால் சோறு சமைத்துவிட்டுக் கறிகளுக்கான காய்களை நறுக்கும் தரு ணம் என்பது குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. இப்படி யாக அறையிற் கிடந்த அவ்வம்மையார் அம்பலத்திற்கு வரக் காரணம் அவரது பிற்கால வாழ்க்கையில் ஏற்பட்ட சில மாறுதல்களேயாகும். அத்துடன் அவரது வாழ்க்கை அடியோடு மாறி இல்வாழ்க்கைக்குரிய ஊனுடலையே வெறுத்தொதுக்கி, இறைவன்பால் வேண்டிப் பெற்ற பேய் வடிவத்துடன் திருவாலங்காடு முதலிய திருத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டுச் சைவ சமயக் கருத்துக்கள் ததும்பி நிற்கும் "அற்புதத் திருவந்தாதி"யையும், "திருவா லங்காட்டு மூத்த திருப்பதிகம்", "திருவிரட்டை மணிமாலை" முதலிய அரிய நூல்களையுஞ் செய்தருளினர். இத்தகைய மாற்றம் அவருக்கு அமையத் துணையாய் நின்றது அவரது பிறப்பும் வளர்ச்சியுமே யாகும். இதன் சிறப்பை, அம்மை யின் வாக்கினுலேயே அறியலாம். 'அற்புதத் திருவந்தாதி' யின் முதற் பாட்டு :

> "பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
> சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
> மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
> எஞ்ஞான்று தீர்ப்ப திடர்."

துன்பம் வந்தபோது மெய்யடியார்களும் சிறிது தளர் வதுண்டு. ஆனல் இத்தகைய துன்பங்கள் தாம் ஆன்மா வைப் பற்றிநிற்கும் மாசுகளை நீக்கிப் பொன்போல் விளங் கச் செய்யும் நெருப்புப்போன்றது என்பதைத் திருவள்ளு வர் "தவம்" என்ற அதிகாரத்தில் விளக்குகிறுர் :

> "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
> சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."

தாங்கொணுத் துயருற்றபோதும் மெய்யடியவர் தளர்ச்சி யடைவதில்லை என்ற அரிய கருத்தை அம்மையார் அவ்வற்புதத் திருவந்தாதியின் அடுத்த பாட்டிலேயே உணர்த்துகின்றுர் :

